# CONTENTS



உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

# கந்தபுராணம்.

## விநாயகர் காப்பு.

1. திகட சக்கரச் செம்முக மைந்துளான்.
சகட சக்கரத் தாமரை நாயக
னகட சக்கர வின்மணி யாவுறை
விகட சக்கரன் மெய்ப்பதம் போற்றுவாம்.

2. உச்சியின் மகுட மின்ன வொளிர்தர நுதலி னோடை
வச்சிர மருப்பி னெற்றை மணிகொள்கிம் புரிவ யங்க
மெய்ச்செவிக் கவரி தூங்க வேழமா முகங்கொண் டுற்ற
கச்சியின் விகட சக்ர கணபதிக் கன்பு செய்வாம்.

## சுப்பிரமணியர் காப்பு.

3. மூவிரு முகங்கள் போற்றி முகம்பொழி கருணை போற்றி
யேவருந் துதிக்க நின்ற விராறுதோள் போற்றி காஞ்சி
மாவடி வைகுஞ் செவ்வேண் மலரடி போற்றி யன்னான்
சேவலு மயிலும் போற்றி திருக்கைவேல் போற்றி போற்றி.

## நூற்பயன்.

4. இந்திர ராகிப் பார்மே லின்பமுற் றினிது மேவிச்
சிந்தையி னினைந்த முற்றிச் சிவகதி யதனிற் சேர்வ
ரந்தமி லவுணர் தங்க ளடல்கெட முனிந்த செவ்வேற்
கந்தவேள் புராணந் தன்னைக் காதலித் தோது வோரே.

## வாழ்த்து.

5. வான்முகில் வழாது பெய்க மலிவளஞ் சுரக்க மன்னன்
கோன்முறை யரசு செய்க குறைவிலா துயிர்கள் வாழ்க
நான்மறை யறங்க ளோங்க நற்றவம் வேள்வி மல்க
மேன்மைகொள் சைவ நீதி விளங்குக வுலக மெல்லாம்.

### திருச்சிற்றம்பலம்

பன்னிரு கரத்தாய் போற்றி பசும் பொன்மா மயிலாய் போற்றி
முன்னிய கருணை ஆறு முகப்பரம் பொருளே போற்றி
கன்னிய ரிருவர் நீங்காக் கருணைவா ரிதியே போற்றி
என்னிரு கண்ணே கண்ணு ளிருக்கும் மணியே போற்றி.



உ
கணபதி துணை

## திருச்சிற்றம்பலம்

புன்னெறி யதனிற் செல்லும் போக்கினை விலக்கி மேலாம்
நன்னெறி யொழுகச் செய்து நவையறு காட்சி நல்கி
என்னையு மடிய னாக்கி யிருவினை நீக்கி யாண்ட
பன்னிரு தடந்தோள் வள்ளல் பாதபங் கயங்கள் போற்றி.

விஷ்வரூப தரிசன தினம் - கந்த சஷ்டி ஐந்தாவது நாள்
சூரபன்மன் வதை படிப்பு விஷ்வரூப செய்யுட்கள் (30 பாடல்கள்)
( திருப்பெரு வடிவம்) செய்யுள் : 420 முதல் 450 வரை.

பிடியத னுருவுமை கொளமிகு கரியது
வடிகொடு தனதடி வழிபடு மவரிடர்
கடிகண பதிவர வருளினன் மிகுகொடை
வடிவினர் பயில்வலி வலமுறை யிறையே

உலகெலாம் உணர்ந்து ஓதற்கு அரியவன்
நிலவுலாவிய நீர்மலி வேணியன்
அலகில் சோதியன் அம்பலத் தாடுவான்
மலர்சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்.

நங் கடம்பனைப் பெற்றவள் பங்கினன்
தென் கடம்பைத் திருக்கரக் கோயிலான்
தன் கடன் அடியேனையும் தாங்குதல்
என் கடன் பணிசெய்து கிடப்பதே.

ஆறுமா முகப்பிரா னன்றி யிவ்விடை
வேறொரு துணையிலை மெய்ம்மை யீதெனத்
தேறின னவனடி சிந்தை செய்தனன்
மாறிழி யருவிநீர் வழியுங் கண்ணினான்.

இந்திரர் ஆகிப் பார்மேல் இன்பம் உற்று இனிது மேவிச்
சிந்தையில் நினைந்தமுற்றிச் சிவகதி அதனில் சேர்வர்
அந்தம்இல் அவுணர் தங்கள் அடல்கெட முனிந்த செவ்வேல்
கந்தவேள் புராணம் தன்னைக் காதலித்து ஓதுவோரே.

*1. உடல்சின மோடு சூரன் ஒருவனாய் அங்கண் நின்றான்*
*அடல்வலி கொண்ட வாளி அந்தர நெறியான் மீண்டு*
*புடையுறு சரங்க ளோடு பொள்ளெனத் தூணி புக்க*
*சுடர்நெடுந் தனிவே லண்ணல் அவன்முகம் நோக்கிச்*
*சொல்வான்.*

1. தான்கொண்ட மாய வடிவம்யாவும் அழிவுற்றலும் அதுவேளை சூரபன்மன் யாதொரு செயலும் செய்யமுடியாது வலியாவும் இழந்து தனது உடலில் சினத்துடன் தனியனாய் நின்றான்.அப்போது அவன் மாயத்திறத்தை அழித்து வலி பெற்ற அந்த அம்புகள் யாவும் வானநெறியில் எழுந்து மீண்டுசென்று எம்பெருமான் புடையில் உள்ள ஏனைய அம்புகளுடன் பொள்ளென்று அம்புக் கூட்டில் ஏபுகுந்து கொள்ள, அதுவேளை சுடர்கொண்ட தனியாகும் வேலினைத் ஏந்திய ஆறுமுகப்பெருமான் சூரனுடைய முகத்தை திருக்கரத்து நோக்கிச் சொல்லியருள் கின்றார்.
தன்னால் அவன் மாயையாவும் அழிக்கப் பெற்று தனியனாகச் செயலற்று நின்றானை நோக்கி அவன் செய்த தவப்பேற்றினால் இதனைக்கருணையுடன் திருவாய்மலர்ந்தருளினார்.

*2. வெம்புய லிடையில் தோன்றி விளிந்திடு மின்னு வென்ன*
*இம்பரில் எமது முன்னம் எல்லையில் உருவங் கொண்டாய்*
*அம்பினில் அவற்றை யெல்லாம் அட்டனம் அழிவி லாத*
*நம்பெரு வடிவங் கொள்வ நன்றுகண் டிடுதி யென்றான்.*

2. சூரபன்மனே நீ கொடிய மேகத்தின் இடையாகத் தோன்றி மறைந்திடும் மின்னல்போன்று இவ்வுலகில் எமது முன்னம் எல்லையற்ற வடிவங்களைக் கொண்டாய்; எமது அம்பால் அவற்றை எல்லாம் அழித்தோம். ஆனால் அழிவிலாத எமது பெரு வடிவத்தை இப்போது கொள்வோம் அதனை நீ நன்றாகக் கண்டிடுவாய் என்றார்.

“ உனது மாயவடிவங்கள் இவ்வுலகின் இயல்பைக் கொண்டது. ஆனால் அவை அழியும் தன்மையானது ; ஆதலால் அவற்றை நாம் அழித்தோம். எமது வடிவமோ அழிவிலாதது அது ஆவதுமில்லை அழிவதுமில்லை. என்றும் உள்ளது; ஆனால் அதை யாரும் காணொணாது; உருவாயும் அருவாயும் உள்ளது.எல்லாம் அதனிடத்துத் தோன்றி பின்னர் அதனிலே ஒடுங்குவன அதனை நாம் காட்டுதும்;கண்டுகொள் ”



சூரன் கொள்ளக்கூடிய மாயவடிவம் தந்திரச் செயல் எல்லாம் இழந்து சும்மா இருக்கின்ற எல்லையில் அவனை எம்பிரான் விடுத்தார். விடுத்த பின்பு அவன் மீதுள்ள கருணையால் பின்னர் தமது எங்கும் நிறையும் எல்லாமும் அல்லவுமாகும் சோதியுரு வைக் காண்பிக்கின்றார்.

*3. கூறிமற் றினைய தன்மை குரைகடல் உலகந் திக்கு*
*மாறிலாப் புவனம் அண்டம் வானவர் உயிர்கள் யாவும்*
*ஆறுமா முகத்து வள்ளல் மேனியில் அமைந்த தன்றி*
*வேறிலைஎன்ன ஆங்கோர் வியன்பெரு வடிவங் கொண்டான்.*

3. இத்தன்மைகளை எம்பெருமான் கூறி, ஓலமிடும் கடல் உலகம் திக்குகள் மாறுதல் இன்றி நின்றிடும் புவனங்கள் அண்டங்கள் தேவர்கள் ஏனையவுயிர்கள் யாவும் ஆறுமுகமுடைய அருள் வள்ளலாகும் பெருமான் திருமேனியில் தான் அமைந்துள்ளன அன்றி வேறில்லை என்னும்படி அங்கு ஓர் மிகவும் அற்புதமான திருப்பெரு வடிவத்தைக் கொண்டருளினார்.

அவனது திருமேனியில்தான் எப்பொருளும் எவ்வுயிரும்; அங்கன்றி வேறில்லை எனும் உண்மைநிலை தெளிவாகிட, எல்லாம் தமதிடத்தில் தோன்றுகின்றன வென்பதை காண முடியாததை காட்டிட வடிவம் கொள்கின்றான் எமது கடவுள்.

எல்லாம் அவனிடத்தில்தான் தோன்றுவன என்பதை நாம் அறிந்தாலும், அவைகள் எமது பார்வைக்கு வேறாக இருப்பன. அதை நாம் காணமுடியாது. ஆனால் அதனை அறிய தவம் செய்தல் வேண்டும் என பெரியோர் மொழிவர். இந்த வடி வைக்காண்பதற்கு உற்ற ஒரு ஆவல்தானும் அவன் தந்தாலொழிய நாமாகவும் அடைய இயலாது. அது ஊழின் வலியாகும் அற்புதமாயும் அநேகமாயும் சொற்பதம் கடந்த சோதியாகியும் ஓயாது எலும்பையும் ஊனையுமே உருக்கவல்ல வடிவம் ஒன்றாய் அன்றும் இன்றும் என்றும் இருப்பது இது ஒன்றே. அத்தோற்றமே சூரனுக்கு இங்கு காட்டப்பெற்றது.

இப்போது சிந்தனைக்கும் எட்டொணாத அந்த திருவுருவைகண்ணால் காணும் படியும் பேறுற்றான் சூரபன்மன். இப்பகுதியை அற்புதம்தோன்ற இப்பால் வரும் பாடல்களில் கூறுகின்றார் கச்சியப்பர்.

*4. உள்ளடி வரைகள் யாவும் ஒண்புற வடியின் நீத்தம்*
*வள்ளுகிர் விரல்கள் முற்றும் வான்உரு மேறு நாள்கோள்*
*எள்ளரும் பரடு தன்னில் இரும்புனற் கிறைவன் சோமன்*
*நள்ளிருள் அனைய மேனி நிருதியோ டரக்கர் நண்ண.*

4. அவர் கொண்ட திப்பெரு வடிவத்தில் அவரின் திருப்பாதத்தின் உள்ளடிகளில் (உள்ளங்கால்) மலைகள் யாவும்; புற அடியில் சமுத்திரநீரும்; அழகிய நகங்கள் உடைய திருவிரல்களில் முழுவதும் வானில் உள்ள இடியேறுகளும் நட்சத்திரங்களும் கிரகங்களும் ; எவராலும் இகழ்ந்து நீக்கிடமுடியாத அற்புதமுடைய திருப்பாதம் மேலுள்ள பரட்டினிலே பெரும் நீர்க்கரசனான வருணபகவானும் சோமனும் நடுயாமத்து இருள்போன்ற மேனியுடைய நிருதி என்னும் தலைவனுடன் இராட்சதரும் இருந்திடவும்.

*5. அடிதிரள் கணைக்கால் தன்னில் ஆரிடர் மணிகள் சானு*
*வடிவமை முழந்தாள் விஞ்சை வானவ ராதி யானோர்*
*தொடைதனின் மகவான் மைந்தன் தொடைமுதல் நடுவன் காலன்*
*கடிதடத் தசுரர் பக்கங் கடவுளர் யாரும் நிற்ப.*

5. திருப்பாதமேல் திரண்டுள்ள கணைக்காலில் முனிவர்களும் சிந்தாமணி முதலிய தெய்வீகப் பொருள்களும் சானுவின் வடிவமாகத் திரட்சிகொண்டு அமைந்த முழந்தாளில் விஞ்சையர்களும் இன்னும் கருடர், கந்தருவர் , கின்னரர்,கிம்புருடர் முதல் ஏனைய கணத்தவரும் தொடையின் மீது இந்திரனும் அவன் மைந்தன் சயந்தனும் தொடையின் முதல் பாகத்து இயமனும் அவனது மந்திரி காலனும் மிகு வலிவுடைய திருவரையின் பின்புறம் ஓர் புறத்து அசுரரும் மறுபுறத்துத் தேவர்கள் யாவரும் நிற்பவும்.

வேலே விளங்கு கையான் செய்ய தாளினில் வீழ்ந்திறைஞ்சி
மாலே கொள இங்ஙன் காண்பதல்லான் மன வாக்குச்செய
லாலே அடைதற் கரிதாய் அருவுரு வாகியொன்று
போலே யிருக்கும் பொருளை யெவ் வாறு புகல்வதுவே



6. இருப்பினில் நாகர் கோச எல்லையில் மருந்தே யுந்திக்
கருப்படும் உயிர்கள் மார்பிற் கலைகள்முந் நூலிற் போதம்
அருப்பயில் உரோமத் தண்டம் அங்கையில் அகில போகந்
திருப்பெருந் தடந்தோள் வைப்பிற் செங்கண்மால் விரிஞ்சன் மேவ.

6. அரையின் இடுப்பில் நாகர்களும் திருக்குறியின் நுனியில் தேவ அமிர்தமும் திருவயிற்றில் கருவாகித் தோற்றமுறும் உயிர்களும் நெஞ்சின் மீது பல கலைகளும் முப்புரியாகும் நூலில் ஞானமும் திருமேனியின்மேல்பால் கொண்ட உரோமங்களில் சகல அண்டங்களும், அழகிய திருக்கையில் இவ்வுலகு எங்கும் யாவரும் அநுப விக்கும் இன்பமான போகங்களும் திருமிக்க பெரும் தோளின் வைப்பினிடத்தே செங்கண்ணராகும் திருமாலும் பிரமதேவனும் இருதோளிலும் ஒவ்வோர் புறமாகத் தங்கிடவும்.

7. மெல்லிதழ் அனைய செங்கை விரல்மிசை அணங்கின் நல்லார்
ஒல்லொலி அங்கி கண்டம் ஒப்பிலா மணிவாய் வேதம்
பல்லிடை யெழுந்து நாவிற் பரமவா கமத்தின் பேதம்
நல்லிதழ் மனுவின் விஞ்சை நாசியிற் பவனன் மன்ன.

7. மிருதுவான பூ இதழை ஒத்த விரலின்மீது தேவப்பெண்களாய் நல்லோரும் ஒவ்வென்று ஒலித்திடும் அக்கினிதேவன் திருக்கழுத்திலும் ஒப்பிலாத முத்துப் போன்ற திருவாயில் வேதங்களும் பற்களின் இடையில் அகரமுதல் எழுத்துக்களும் நாவில் பரமாய ஆகமங்களின் பேதங்களும் நன்மையாகும் திரு இதழில் மனுவின் விஞ்சைகளும் நாசியில் (மூக்கு) வாயுபகவானும் பொருந்தியிருப்ப 426

பத்தித் திருமுக மாறுடன் பன்னிரு தோள்களுமாய்த்
தித்தித் திருக்கும் அமுதுகண் டேன்செயன் மாண்டடங்கப்
புத்திக் கமலத் துருகிப் பெருகிப் புவனமெற்றித்
தத்திக் கரைபுரளும் பரமாநந்த சாகரத்தே

*8. கருணைகொள் விழியில் சோமன் கதிரவன் செவியில் திக்குத்*
*திருநுதற் குடிலை வைப்புச் சென்னியில் பரம ஆன்மா*
*மரபினின் மேவித் தோன்ற மாறிலா திருக்குந் தொல்லை*
*ஒருதன துருவங் காட்டி நிற்றலும் உம்பர் கண்டார்.*

8. கருணைகொண்ட திருவிழிகளில் சந்திரனும் சூரியனும் திருச்செவிகளில் திக்குத் திகாந்தமும் திருநெற்றியில் குடிலை என்னும் மந்திரமூல எழுத்தும் திருத்தலையில் பரமாய ஆன்மா சிவமும் எல்லாம் முறையாக என்றும் எங்கும் எல்லாவிடமும் மாறின்றி இருந்திடும் மரபால் அற்புதமாய் பேரொளியாய் அளவிடற்கரியாய் நின்ற காண்டற்கரிய தான எல்லாம் தோன்றிடும் தொன்மையான வடிவினை ஆறுமுகப்பெருமான் காண்பித்து நிற்றலும் தேவர்கள் அதனை முன்னாகக்கண்டனர், 427

*9. செஞ்சுடர் அநந்த கோடி செறிந்தொருங் குதித்த தென்ன*
*விஞ்சிய கதிர்கான் றுள்ள வியனபெரு வடிவை நோக்கி*
*நெஞ்சகந் துளங்கி விண்ணோர் நின்றனர் நிமல மூர்த்தி*
*அஞ்சன்மின் அஞ்சன்மின் னென் றருளினன் அமைத்த கையான்.*

9. செம்மையுடைய சுடர் ஒளிகொண்ட அநந்தகோடி சூரியர் ஒருங்காகத் திரண்டு உதித்தால் எத்துணை, பேரொளியாகுமோ அத்துணையிலும் மிகுந்த ஓர் பேரொளியைப் பரப்பிடும் அற்புதமாய திருப்பெரு வடிவைக்கண்டு சசிக்கமுடியாது தங்கள் நெஞ்சம் நடுக்கம் கொண்டு தேவர்கள் இது யாது ஆகுமோ என நின்றனர், அதுபோது நிமலமூர்த்தியான கடவுள் ஆறுமுகப்பெருமான், தேவர்களே! அஞ்சாதீர், அஞ்சாதீர் என தமது திருக்கரத்தை அமைத்து காண்பித்து அபயம் கொடுத்தருளினார்.

*ஆங்காரமு மடங்காரொடுங்கார் பரமாநந்தத்தே*
*தேங்கார் நினைப்பு மறப்பு மறார்தினைப் போதளவும்*
*ஓங்காரத் துள்ளொளிக் குள்ளே முருக னுருவங்கண்டு*
*தூங்கார் தொழும்புசெய்யாரென் செய்வார்*
*யமதூதருக்கே*



*10. அண்டர்கள் யாரும் எந்தை அருண்முறை வினவி யுள்ளம்*
*உண்டிடு விதிர்ப்பு நீங்கி உவகையால் தொழுது நின்றார்*
*தண்டுளி வரைய தென்னத் தணப்பறச் சிதறும் ஊழிக்*
*கொண்டலின் தோற்றம் நோக்கிக் குலவுறு மஞ்ஞை யேபோல்.*

10. தேவர்கள் யாவரும் எந்தைபெருமான் ஆறுமுகன் அஞ்சாதீர் என அருளிச் செய்த முறையினை அறிந்து உள்ளத்தில் உண்டாகிய நடுக்கம் நீங்கி பேருவகையால் தொழுதவாறு நின்றார்கள். அவர்கள் கொண்ட ஆநந்த நிலை எவ்வாறாயிற்றென்றால் குளிர்ந்த மழைத்துளிகள் ஒவ்வொன்றும் ஓர் மலைபோன்று ஓய்வின்றிச் சொரிந்திடும் ஊழிக்காலத்து மேகத்தின் தோற்றம் கண்டு குலவிக் கூத்தாடி மகிழ்வுறும் மயில் போல் ஆனார்கள்.

மயில், மேகத்தைக் கண்டால் இயற்கையாகவே மகிழ்வுறுவதன்றி செயற்கை யாகவன்று; அந்த மயிலின் மகிழ்ச்சியும் கூத்தும் தோகை விரித்தாடுதற்கு ஏற்கும் உணர்வும் மயிலை அறியாதே மேகத்தின் தோற்றத்தால் நிகழ்ந்ததுள் உணர்வும் மகிழ்வுமாகும். இதேபோன்று பேரொளிப் பிழம்பாகும் முருகப்பெருமானது அருளும் அத்தேவர்பால் உவமை கடந்த இன்பத்தை ஊட்டி மகிழ்வுறச் செய்தது என்க .429

*11. இறுதியும் முதலும் இல்லா இப்பெரு வடிவந் தன்னைக்*
*கறைவிட முறழுஞ் சூரன் கண்டுவிம் மிதத்தின் நிற்ப*
*அறிவரும் உணர்தல் தேற்றா ஆறுமா முகத்து வள்ளல்*
*சிறிதுநல் லுணர்ச்சி நல்கியினையன செப்ப லுற்றான்.*

11. முதலும் முடிவும் இல்லாத என்றும் உ ள்ள இப்பெரு வடிவந்தன்னைக் கொடிய கரிய நஞ்சை ஒத்த சூரபன்மன் கண்டு ஆச்சரியத்துடன் நிற்ப அதுவேளை ஆறுமுகப் பிரானை அறியத்தவமியற்றி அறிய முற்படுவாரும் அறிந்திட ஒண்ணாத ஆறுமுகமுடைய அருள்வள்ளல் தன்முன் தோன்றும் பெருமானது திருப் பெருவடிவத்தின் அற்புதத்தை நோக்கி இதனைச் சொல்லலுற்றான்.

எம்பெருமானது திருப்பெருவடிவங்கண்டு முன்னர் தேவர்கள் நடுங்கினர். ஆனால் சூரன் மட்டும் நடுங்காது சோராது ஆச்சரியத்துடன் திடமாகி நின்றதைக் காண்க. இதுதான் தவத்தின் பேறு.

*12. எண்ணிலா அவுணர் தானை யாவையும் இமைப்பிற் செற்று*
*விண்ணுலா அண்டந் தோறும் வியன்சமர் ஆற்றி என்பால்*
*நண்ணினார் தம்மை எல்லாம் நாமறத் தடிந்து வீட்டி*
*வண்ணமான் தேரும் மீண்டு வராநெறி தடுத்தான் மன்னோ.*

12. எண்ணற்றதான அசுரர்கள் யாவரையும் ஓர் இமைப் பொழுதில் அழித்து; அஃதன்றி விண்ணில் விளங்கிடும் அண்டந் தோறும் பெரும் சமரினைச் செய்து என் பாலாகத் தோன்றிய துணைவர் மைந்தர்கள் யாவரையும் அவர்கள் பெயர் கூட நிலவிடாதபடி அழித்து வீழ்த்தி அழகு நிரம்பிய இந்திரஞாலம் என்னும் தேரும் மீண்டு வராதபடி அதன் வழியைத் தடுத்தான் இக்குழந்தை.

*13. திண்டிறல் உடையேன் தூண்டுந் திறற்படை யாவும் நீக்கிக்*
*கொண்டவென் மாய முற்றுங் கொடுஞ்சரம் அதனான் மாற்றி*
*அண்டமும் புவனம் யாவும் அமரரும் பிறவுந் தன்பாற்*
*கண்டிடும் வடிவ மொன்று காட்டியென் கண்முன் நின்றான்.*

13. எவராலும் நீக்கமுடியாத திண்மைக் குன்றாத் திறல் உடையேன்யான் செலுத்திடும் மிகத்திறம்பட்ட படைகள் யாவற்றையும் நீக்கி நான் கொண்ட மாயவடிவங்கள் முற்றையும் கொடிய அம்புகளால் மாற்றி அண்டங்களும் புவனங்கள் யாவும் தேவரும் பிற கடவுளரும் உயிர்களும் யாவும் தன்பால் யான் கண்டிடும்படியான இந்தப் பேரொளியாய வடிவத்தைக்காட்டி என்கண் முன் நின்றான். இந்த குழந்தை வடிவான முருகன்.

*சேந்தனைக் கந்தனைச் செங்கோட்டு வெற்பனைச் செஞ்சுடர்வேல்*
*வேந்தனைச் செந்தமிழ் நூல்விரித் தோனை விளங்கு வள்ளி*
*காந்தனைக் கந்தக் கடம்பனைக் கார்மயில் வாகனனைச்*
*சாந்துணைப் போது மறவா தவர்க்கொரு தாழ்வில்லையே*



*14. கோலமா மஞ்ஞை தன்னிற் குலவிய குமரன் தன்னைப்*
*பாலனென் றிருந்தேன் அந்நாட் பரிசிவை யுணர்ந்தி லேன்யான்*
*மாலயன் தனக்கும் ஏனை வானவர் தமக்கும் யார்க்கும்*
*மூலகா ரணமாய் நின்ற மூர்த்திஇம் மூர்த்தி அன்றே.*

14. கோலம் மிகுந்த மயில்வாகனத்தில் எழுந்து விளங்கிய இக்குமரனைப் பாலன் என்று யான் இருந்தேன். அம்மம்மவோ! அந்த நாளில் இவன் இப்படியானவன் என்னும் பரிசினை உணராது விடுத்தேனே! யான். இவனை நோக்கினால் இவன்தான் திருமால் பிரமனுக்கும் அவரன்றி மற்றை ஏனைய தேவர்கட்கும் யார்க்கும் மூல காரணமாய் நின்ற மூர்த்தியாகும் சிவமே இந்த ஆறுமுகமுடைய மூர்த்தியும் அல்லவோ.

*15. ஒற்றென முன்னம் வந்தோன் ஒருதனி வேலோன் தன்னைப்*
*பற்றிக லின்றி நின்ற பராபர முதல்வன் என்றே*
*சொற்றனன் சொற்றதெல்லாந் துணிபெனக் கொண்டிலேனால்*
*இற்றையிப் பொழுதில் ஈசன் இவனெனுந் தன்மை கண்டேன்.*

15. என்னிடத்துத் தூதாக முன்னம் வந்த வீரவாகுதேவன் அன்று தன்னந் தனியாய் நிற்கும் வேலினைத் தாங்கிய பெருமானை பற்றும் வெறுப்பும் இன்றி நிற்கின்ற பராபர முதல்வன் என்றே சொல்லினான் அதுவேளை யான் அவன் சொல்லியதெல்லாம் உண்மையாகும் என எண்ணங் கொளாதிருந்தேனே. ஐய்யய்யோ ஆனால் இன்றைய இப்பொழுதில் ஈசனாயவன் இக்குழந்தையே என்னும் தன்மையை நேரில் யான் கண்டுகொண்டேன்.

*நாளென் செயும்வினை தானென் செயுமெனை நாடிவந்த*
*கோளென் செயுங்கொடுங் கூற்றென் செயுங்கும ரேசரிரு*
*தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந் தண்டையுஞ் சண்முகமுந்*
*தோளும் கடம்பு மென்க்குமுன் னேவந்து தோன்றிடினே.*

16. *மீயுயர் வடிவங் கொண்டு மேவிய தூதன் சொற்ற*
*வாய்மைகள் சரதம் அம்மா மற்றியான் பெற்ற அண்டம்*
*ஆயவை முழுது மற்றும் அறுமுகம் படைத்த செம்மல்*
*தூயபொற் பதரோ மத்தில் தோன்றியே நிற்கும் அன்றே.*

16. மிக உயர்வான வடிவங் கொண்டு இங்கு வந்த அத்தூதுவன் சொல்லிய வார்த்தைகள் முழுவதும் உண்மையம்மா ஏனெனில் அத்தூதுவன் வீரவாகு சொல்லிய பிரகாரம் நான் அரசாளப்பெற்ற ஆயிரத்தெட்டு அண்டங்களும் இச்சோதி வடிவாம் ஆறுமுகப்பரம் பொருளின் தூய்மையான திருப்பாதத்துள்ள ஓர் உரோமத்தில் தோன்றியே நிற்கும். அதனைக்கண்டேன் இப்போது;

17. *அண்டர்கள் முனிவர் ஏனோர் அகிலமுங் காட்டி அண்ணல்*
*கொண்டிடு படிவ முற்றுங் குறித்தியார் தெரிதற் பாலார்*
*எண்டரு விழிகள் யாக்கை எங்கணும் படைத்தோர்க் கேனுங்*
*கண்டிட அநந்த கோடி கற்பமுங் கடக்கும் அன்றே.*

17. தேவர்கள் முனிவர் ஏனைய கடவுளர் உயிர்கள் எல்லா உலகுகள் யாவையும் தன்பால் காட்டி அண்ணலான ஆறுமுகன் என்முன்னாகக் கொண்டவடிவம் முழுவதையும் யாரே குறித்து அறிய முடியும் எண்ணற்ற கண்களைத் தன் உடலமெல்லாம் கொண்டவர் தாமும் இதனைக் காண்பதற்கு அநந்தகோடி கற்பகாலங்களும் கடந்திடும் அல்லவோ ? அது அவ்வளவு அற்புதமும் சிறப்புமுடையது. 436

18. *சீர்க்கும ரேசன் கொண்ட திருப்பெரு வடிவந் தன்னில்*
*ஏர்க்குறும் ஒளியுஞ் சீரும் இளமையும் எழிலும் எல்லாம்*
*ஆர்க்குள உலகில் அம்மா அற்புதத் தோடும் பல்காற்*
*பார்க்கினுந் தெவிட்டிற் றில்லை இன்னுமென் பார்வை தானும்.*



18. அழகுடைய குழந்தையாகும் ஈசன் இங்கு கொண்டருளிய திருப் பெரு வடிவத்தில் அதற்கு ஏற்புடைய ஒளியும் சீரும் இளமையும் எழிலும் எல்லாம் வேறு ஆர்க்கு இந்த உலகில் உள்ளது. அம்மவோ இந்த ஈசனுடைய வடிவத்தை அற்புதத்துடன் நான் பார்க்கப் பார்க்க இன்னமும் என் பார்வையும் தெவிட்டிற்றில்லை. பார்க்கப் பார்க்க அற்புதமாய் ஆனந்தமாய் இருக்கின்றதேயொழிய ஒருக்காலேனும் அலுத்திடவில்லை எனது பார்வை என்றான். 437

19. *நேரில னாகி ஈண்டே நின்றிடும் முதல்வன் நீடும்*
*பேருரு வதனை நோக்கிப் பெரிதுமச் சுறுவ தல்லால்*
*ஆரிது நின்று காண்பார் அமரரில் அழிவி லாத*
*சீரிய வரங்கொண் டுள்ளேன் ஆதலில் தெரிகின் றேனால்.*

19. தனக்கு யாரும் நேரில்லாதவனாகி இவ்விடம் நின்றிடுகின்ற முதல்வனான முருகப் பெருமானின் நெடிய பார்பதம் அண்டம் அனைத்துமாய்ப் பரந்த பேருருவம் அதனைக் கண்ணுற்றுப் பெரிதும் யாரும் அச்சுறுவது அல்லாமல் யார் தான் இதனைக் கொஞ்சமேனும் நின்று காண்பார். நான் காண்கின்றேன் ஏனென்றால் தேவர்கள் யாவரிலும் பார்க்க சீருடைய வரங்கொண்டுள்ளேனாதலின் இதனை யான் இங்கு நின்று தெரிகின்றேன். 438

*விழிக்குத் துணை திரு மென்மலர்ப் பாதங்கள் மெய்ம்மை குன்றா*
*மொழிக்குத் துணை முருகா என்னும் நாமங்கள்; முன்பு செய்த*
*பழிக்குத் துணை அவன் பன்னிரு தோளும் ; பயந்த தனி*
*வழிக்குத்துணை வடிவேலும், செங்கோடன் மயூரமுமே.*

*20. ஆயிர கோடி காமர் அழகெலாந் திரண்டொன் றாகி*
*மேயின எனினுஞ் செவ்வேள் விமலமாஞ் சரணந் தன்னில்*
*தூயநல் லெழிலுக் காற்றா தென்றிடின் இனைய தொல்லோன்*
*மாயிரு வடிவிற் கெல்லாம் உவமையார் வகுக்க வல்லார்.*

20. ஆயிரகோடி மன்மதர்களின் அழகு எல்லாம் திரண்டு இங்குகூடி ஓர் உருவாகிப் பொருந்தினனெனினும், செம்மையாகும் பேரொளியுடைய இப்பெருமானின் நின்மலமாகும் திருப்பாததிற் கொண்ட தூய்மையான நல்ல எழிலுருவுக்கு இணையா காது எனச்சொன்னால், இவ்வாறான எல்லார்க்கும் முன்னைய பெருமானின் இப்பெரு வடிவின் சிறப்பிற்கெல்லாம் யார் உவமை எடுத்து வகுத்துக் கூறிட வல்லமை உடையவர்.

*21. இங்கென துயிர்போல் உற்ற இளவலும் இளைய சேயுஞ்*
*செங்கையில் வேலோன் றன்னைச் சிறுவனென் றெண்ணல் கண்டாய்*
*பங்கயன் முதலோர் காணாப் பரமனே யாகும் என்றார்*
*அங்கவர் மொழிந்த வாறுஞ் சரதமே ஆன தன்றே.*

21. இங்கே எனது உயிர்போல் தோன்றிய தம்பி சிங்கமுகாசூரனும் இளையமைந்தனான இரணியனும் அன்று என்னை நோக்கி, அண்ணலே! சிவந்த கையில் வேற்படையையுடைய பெருமானை ஓர் குழந்தையென எண்ணாதே! அவர்தான் பிரமன் திருமால் முதலாம் தேவர்களும் கண்டு கொள்ள முடியாத பரமன் சிவனேயாகும் என்றார்கள். அவர்கள் அன்று சொன்னதெல்லாம் இன்று நான் காணும் போது உண்மையாயிற்றே !



*22. அண்ணலார் குமரன் மேனி அடிமுதல் முடியின் காறும்*
*எண்ணிலா வூழி காலம் எத்திறம் நோக்கி னாலுங்*
*கண்ணினால் அடங்கா துன்னிற் கருத்தினால் அடங்கா தென்பால்*
*நண்ணினான் அமருக் கென்கை அருளென நாட்ட லாமே.*

22. எல்லோர்க்கும் மேலோரான குமரப்பெருமான் மேனியின் அடி முதல் முடியின் காறும் எண்ணில்லாத ஊழிகாலம் வரையும் எத்திறத்தால் யான் நோக்கினாலும் அது காண்கின்ற கண்ணுக்கு அடங்கவில்லை. அல்லது அந்த வடிவை உன்னி நினைந்தாலும் அடங்கவில்லை . ஆகையால் இத்தகைய அரும்பெருல் மரபிற்குரியனான பெரும் கடவுள் என் பாலாகப் போரிட வந்தான் என்று சொல்வது அது அவனுடைய அருளாகும் என்றுதான் நான் உறுதியாகச் சொல்வேன் என்றான் சூரபன்மன். எல்லாவற்றையும் தானாகவே இயற்ற வல்ல இந்தக் கடவுள் என்னுடன் போரிட வந்தமை அவன் அருளுடையவன் என்பதைக் காண்பிப்பதன்றி வேறில்லை என்றான்.

*23. திருகிய வெகுளி முற்றுந் தீர்ந்தன செருவின் ஊக்கம்*
*அருகிய துரோமம் புள்ளி ஆயின விழியில் தூநீர்*
*பெருகிய திவன்பால் அன்பு பிறந்தன தமியேற் குள்ளம்*
*உருகிய தென்பு தானும் உலைமெழு காகும் அன்றே.*

23. எம்பெருமானுடைய இப்பெருவடிவைக் காண்டலும் என்னை இதுகாறும் போட்டு வதைத்த கோபம் முழுவதும் தீர்ந்தது. போரிட வேண்டும் என்னும் எனது ஊக்கம் அருகிக் குன்றிப்போயது உரோமங்கள் சிலிர்த்து கூச்செறிகின்றது. என்னுடைய கண்களில் தூயநீர் பெருகுகின்றது. இவன்பால் என்னையறியாது அன்பு தானாகவே பிறக்கின்றது. தமியேனுடைய உள்ளம் உருகுகின்றது இதுவன்றி இப்பகவானை நோக்கும் பொழுது என் எலும்புதானும் கொல்லனுடைய உலைமுகத்தில் வைத்த மெழுகுபோல் உருகி நிற்கின்றது.

*24. போயின அகந்தை போதம் புகுந்தன வலத்த தான*
*தூயதோர் தோளுங் கண்ணுந் துடித்தன புவன மெங்கும்*
*மேயின பொருள்கள் முற்றும் வெளிப்படு கின்ற விண்ணோர்*
*நாயகன் வடிவங் கண்டேன் நற்றவப் பயன் ஈதன்றோ.*

24. என் அகந்தை போயது. ஞான உணர்வு தோன்றியது. தூயதான எனது வலக்கண்ணும் தோளும் துடித்தன அம்மவோ இப்புவனமெங்கும் பொருந்திய பொருள்கள் முற்றிலும் தோன்றி வெளிப்படுகின்ற தேவர்கள் நாயகராகும் பெருமானின் திருவுருவை நான் கண்டுகொண்டேன். இது நான் செய்த நல்ல தவப் பயனகுமன்றே.

*25. சூழுதல் வேண்டும் தாள்கள் தொழுதிடல் வேண்டும் அங்கை*
*தாழுதல் வேண்டுஞ் சென்னி துதித்திடல் வேண்டும் தாலு*
*ஆழுதல் வேண்டுந் தீமை அகன்றுநான் இவற்கா ளாகி*
*வாழுதல் வேண்டும் நெஞ்சம் தடுத்தது மானம் ஒன்றே.*

25. இப்பெருமானை வணங்கிட எனது கால்கள் சூழ்ந்து வரல்வேண்டும். என் அழகிய கைகள் வேறு எப்பணியும் செய்தலின்றி இவரைத் தொழுதிடல் வேண்டும். தலை இப்பகவானை தாழ்ந்து பணிந்திடல்வேண்டும். எனது நாக்கும் இவரை துதித்திடல் வேண்டும். எனது தீய எண்ணம் செயல் யாவும் ஆழ்ந்திடல் வேண்டும். இத்தீமை அகன்று நான் இன்று தொட்டு இவற்கு ஆளாகி வாழுதல் வேண்டும். இதையெல்லாம் நான் துணிவாகச் செய்திடற்கு என்நெஞ்சத்து மானம் ஒன்று தான் இதைச் செய்யவேண்டாம் எனத் தடுக்கின்றது.

எனது உணர்வுகள் வணங்கிச் சூழ்ந்து வலம்வந்து தொழுது போற்றித் தீமைகள் ஆழ்ந்து நீங்கிச் சிந்தனை தூயதாய்ச் செயலும் அவ்வாறாகி நிற்க வேண்டும் என என்னையறியாது தூண்டி நிற்பினும், இத்தனை நாளும் போரிட்ட நான் இப்படியும் செய்யலாமோ என என் மானம் என்னைத் தடுத்தது என்றான். *444*



*26. ஒன்னலர் பொருட்டா லேகி உறுசமர் இழைத்த செம்மல்*
*தன்னுரு வதனைக் காண்கின் முனிவதே தகுதியாகும்*
*வன்னிகொள் வெண்ணெ யேபோல் வலியழிந் துருகிற் றென்றால்*
*என்னுடைய வயத்த வன்றோ உணர்ச்சியு மியாக்கை முற்றும்.*

26. எனது பகைவர் பொருட்டால் இங்கு வந்துற்றதொரு பெரும்போரை இழைத்திட்ட இந்தத் தலைவனது உருவை யான் கண்டபோதே கோபிப்பதே தக்கதொரு கருமம். ஆனால் அதுவன்றி நெருப்பிலிட்ட வெண்ணெய்போன்று என்வலியெல்லாம் அழிந்து இவரைக் கண்டு என் உள்ளம் உருகுகிறது என்றால் என்னுடைய வசப்பட்டு நிற்பதோ இந்த உடம்பும் அல்லது உணர்வுதானும்.

பகைவரைக் கண்டபோது கோபிப்பது இயல்பு. அதுவன்றி இவரைக் கண்ட போது உருகுகின்றது எனது சிந்தை என்றால் எனது உடலையும் உணர்வையும் எனது சொற்படி இயங்குவன என்றுநான் சொல்லவும் ஆமோ? என்றான்.

*27. ஏடவிழ் அலங்கல் மார்பன் என்னுடன் இந்நாள் காறும்*
*நீடிய இகற்போர் ஆற்றி நீங்கலா நின்ற தெல்லாம்*
*ஆடலின் இயற்கை யென்றே அறிந்தனன் அஃதான் றன்னான்*
*சாடிய வேண்டு மென்னின் யாரது தாங்கற் பாலார்.*

27. இதழ்விரிந்த மாலையைக்கொண்ட மார்புடைய இந்தப் பெருமான் என்னுடன் இற்றை நாள்வரையும் நீண்டதொரு பகையுடன் போரிட்டு நின்றமை எல்லாம் எம்பெருமானுடைய திருவிளையாட்டின் இயற்கை என்றுதான் நான் இப்பொழுது அறிந்தனன். அதுவல்லாமல் என்னை இவன் கொல்ல வேண்டி நினைந்தால் அப்பாடா அதை யார் தாங்க முடியும்?

என்னுடன் போரிட்டு நின்றது இப்பெருமானுக்கு ஓர் திருவிளையாட்டு. அப்படியல்லாது இவர் கொலை செய்யும் நோக்கமுடையராயின் யார் அதனைச் சகிக்க முடியும். ஆதலால் இவனுடைய கருணையின் பெருமையை இன்று நான் கண்டு உணர்ந்துகொண்டேன்.

*28. ஏதமில் அமரர் தம்மை யான்சிறை செய்த தெல்லாந்*
*தீதென உரைத்தார் பல்லோர் அன்னதன் சொற்கை யாலே*
*வேதமும் அயனும் ஏனை விண்ணவர் பலருங் காண*
*நாதனிங் கணுகப் பெற்றேன் நன்றதே யான தன்றே.*

*28.* ஏதும் ஒரு குற்றமில்லாத அந்தத் தேவர்களுக்கெல்லாம் யான் செய்தது தீது பாவம் என்று பலர் இங்கு உரைத்தார்கள். ஆனால் அப்படி யான் செய்த லால்தானே இன்று வேதமும் பிரமனும் ஏனைய தேவர்கள் பலரும் காண முடியாத பெரும் தலைவன் என்முன் வந்து தோன்றிடப் பெற்றேன். ஆதலின் எனது செய்கை நன்றாகத்தான் ஆகிட்டதல்லவோ?

ஆதியும் அந்தமும் இல்லாத அரும்பெரும் சோதியாய் எங்கும் பரந்த இறைவனை நோக்கநோக்க அற்புதமும் உவகையும் மேல்மேல் பெருகின சூரபன்மனுக்கு. அந்தநிலை வளர்ந்து வளர்ந்து இன்பமாயதே ஒழிய குறைந்திட வில்லை ஆதலால் அதன் அற்புதநிலையால் பண்டு யான் செய்த பழியானது இப்போது எனக்குப் பாக்கியமாயிற்று என்பதாகக் கூறினான்.

*29. ஒன்றொரு முதல்வ னாகி உறைதரு மூர்த்தி முன்னம்*
*நின்றமர் செய்தேன் இந்நாள் நெஞ்சினித் தளரேன் அம்மா*
*நன்றிதோர் பெருமை பெற்றேன் வீரனும் நானே யானேன்*
*என்றுமிப் புகழே நிற்கும் இவ்வுடல் நிற்ப துண்டோ.*

*29.* எல்லார்க்கும் ஒரேயொரு கடவுளாகி உறைகின்ற மூர்த்தியானஇப் பெரு மான் திருமுன்பு நின்று இந்நாள்வரை பெரியதொரு போரினைச் செய்திடப் பெற்றேன். ஆதலால் எதற்கும் இனி என் நெஞ்சம் தளரமாட்டேன். மிகவும் நன்றாகும் இந்தவொரு பெருமையை பெற்றுக்கொண்டேன் மிகவும் வீரனும் நானேயானேன். என்றும் என்னுடைய இப்புகழ் நிற்கும். ஆனால் இந்த உடம்பு நிற்பதுவும் உணடோ? இல்லை.

எம்பெருமானுடன் முன்னின்று போரிட்ட புகழ் பலகோடி அண்டமும் பரவி ஊழி ஊழியெல்லாம் பேசப்படும். ஆனால் எனது இந்த உடல் நிற்பதோ அது நிலையாது. *448*



*30. வானுளோர் சிறையை நீக்கி வள்ளலை வணங்கி இந்த*
*ஊனுலாம் உயிரைப் போற்றி அளியர்போல் உறுவன் என்னின்*
*ஆனதோ எனக்கி தம்மா ஆயிர கோடி யண்டம்*
*போனதோர் புகழும் வீரத் தன்மையும் பொன்றி டாவோ.*

*30.* ஆதலின் இப்போது தேவர்களது சிறையினை நீக்கி இந்த அருள் வள்ளலை வணங்கி இந்த ஊனில் உலவிடும் உயிரைப் பாதுகாத்து வாழ லாம், அது தெரிந்து கொண்டேன்! ஆனால் அது எனக்கு ஆகுமா? ஆகாதே, ஏனெனில் ஆயிரகோடி அண்டங்கள் தோறும் போனதொரு எனது புகழும் எனது வீரத்தன்மையும் பொன்றிப்போகாதோ?

இது கருணையுருவம் . இதை வணங்கி எனது தீய செய்கையாகும் தேவர் சிறையை நீக்கி எக்காலமும் எனது உயிருக்குக் கெடுதலின்றி வாழ முடியும். ஆனால் இன்று எல்லா உலகையும் வென்று எனக்கு ஒப்பாரும் மிக்காரும் யாருமின்றி இருக்கும் பெரும் புகழும் வீரத்தன்மையும் போய்விடுமே? பின்னர் யார்தான் இதைப் பெற முடியும். ஆகவே எனது உயிரிலும் மானமே பெரிது **என்றான்.** *449*

*தடுங்கோள் மனத்தை விடுங்கோள் வெகுளியைத் தானமென்றும்*
*இடுங்கோள் இருந்தபடி இருங்கோள் எழுபாரும் உய்யக்*
*கொடுங்கோபச் சூருடன் குன்றந் திறக்கத் தொளைக்க வைவேல்*
*விடுங்கோன் அருள்வந்து தானே யுமக்கு வெளிப்படுமே.*

*31. என்னஇத் தகைய பன்னி நிற்றலும் எவர்க்கும் மேலோன்*
*உன்னருந் தகைத்தாய் நின்ற ஒருபெருந் தோற்றம் நீத்து*
*மின்னிவர் கலாபம் ஊர்ந்த வியனுருக் கொண்டு நண்ணித்*
*துன்னலன் போத மாற்றித் தொன்மைபோ லாகச் செய்தான்.*

31. என்று இத்தகையதான வார்த்தைகளைச் சூரபன்மன் எடுத்து உரைத்து நிற்றலும் அதுபோது எவர்க்கும் மேலோரான ஆறுமுகப்பெருமான் நினைக்கவும் முடியாத நிலையாகி நின்ற தனது ஒரு பெரும் தோற்றத்தை நீக்கியருளி பின்னர் முன்போல் மின்னலின் ஒளிகூடிய தோகையைக்கொண்ட மயிலின்மீது எழுந் தருளிய அற்புதத் திருவுருவைக் கொண்டு அங்கு தோன்றியருளி சூரன்பால் தோற்றிவித்த ஞான உணர்ச்சிகளையும் நீக்கி பழமைபோல அவனை விளங்கிடச் செய்தார்.

ஆக்குபவனும் காப்பவனும் அழிப்பவனும் அருள் தருபவனும் தன்பால் போக்குபவனும் அவன் தொண்டில் புகுவிப்போனும் எல்லாம் ஒருவனே; ஆகையால் காணாதனவெல்லாம் காட்டித் தன் கருணைத்தேன் காட்டித் தன் பகைவனைச் சொல்லாதன சொல்லி உவகைகூர வைத்தருளும் ஆறுமுகப்பெருமானின் திருவருட் பேற்றை யார் தான் எடுத்து ஓதிட முடியும்.

*32. காரண னாகித் தானே கருணையால் எவையும் நல்கி*
*ஆருயிர் முழுது மேவி அனைத்தையும் இயற்றி நிற்கும்*
*பூரண முதல்வன் மைந்தன் போதகம் அளித்து மாற்றிச்*
*சூரனை மயக்கஞ் செய்யுஞ் சூழ்ச்சியோ அரிய தன்றே.*

32. எப்பொருட்கும் தானே காரணனாகித் தன் கருணையால் எவற்றையும் படைத்து எல்லா அரிய உயிர்கள்தோறும் பொருந்தி அனைத்தையும் இயற்றி நிற்கின்ற குறை விலா நிறைவாய் நின்றருளும் முதல்வன் சிவபெருமானுடைய மைந்தன் ஆறுமுகப் பெருமான் சூரபன்மன் பால் ஞான உணர்வைக் கொடுத்து பின்னர் நீக்கி இப்படியாக மயங்க வைக்கும் சூழ்ச்சியாயது ஓர் அரிய செய்கையாவதன்று.



## AUM
## TRANSLATION OF THE 32 VERSES OF THIRUPPERUM VADIVAM

1. When Soorapadman realised that his illusionary images were vanished by Lord Muruga's ARROWS, he stood there alone, at the battle field, with his unsubdued anger. At that moment the powerful ARROWS which 'tore' the illusonary effects of Soorapadman returned through the skies to be together with the other Arrows in the 'ARROW BOX' which was hung on Lord Muruga's shoulders. At this instance, LORD ARUMUGA PERUMAAN who holds the GLORIOUS VEL looked at Soorapadman's face and said graciously,

2. "Soorapadma, you had taken many 'as fast as lightning' illusionary images on this earth (Battle-field) in front of me, and I have annihilated them with my ARROWS. But I will take my eternal Vishwa Roopam in front of you and you shall have a thorough vision of it."

3. On saying this to Soorapadman, Lord Muruga took a very glorified Vishwa Roopam which contained the large-wide restless seas, all worlds, all directions, the whole UNIVERSE (Puvanams) and ANDANGGAL, all Dehvas and all other living beings. All were situated within His Thirumehni (Divine Body) and nowhere else.

உ

கணபதி துணை

# திருச்சிற்றம்பலம்

## சூரனமைச்சியற்றுபடலம்

1. *என்றுமற்றிவைசூரபன்மாவிசைத்திடலுந்*
*துன்றுபஃறலைச்சீயமாமுகமுடைத்துணைவ*
*னன்றுநன்றெனவினவியேயின்னமுநானிங்*
*கொன்றுகூறுவன்முனியலைகேட்டியென்றுரைப்பான் 117*

1. இவ்வாறே இந்த வார்த்தைகளைச் சூரபன்மன் எடுத்துச் சொல்லுதலும், நெருங்கிய பலதலைகளை உடைய பெரிய சிங்கமுகனாகிய தம்பியானவன் நல்லது நல்லது என்று கேட்டு,நான் இன்னமும் ஒரு விஷயமெடுத்து இங்கே சொல்லுவேன், கோபமில்லாமல் அதனைக் கேட்க வேண்டும் என்று சொல்லுகின்றான்.

2. *வாலிதாமதிச்சடிலமும்பவளமால்வரையே*
*போலுமேனியுமுக்கணுநாற்பெரும்புயமு*
*நீலமாமணிக்கண்டமுங்கொண்டுநின்றனனோன்*
*மூலகாரணமில்லதோர்பராபரமுதல்வன். 118*

2. தமக்கொரு மூலகாரணமில்லாது பிரபஞ்சங்களுக்கு எல்லாம் தாமே முதல்வராய்ச் சுத்தமாயாதீதராய் நின்ற பரமசிவன், வெண்மையாகிய பிளம் பிறையை அணிந்த சடையையும், பெரிய பவளமலை போன்ற திருமேனியையும், மூன்று கண்களையும், பெருமையாகிய சதுர்ப்புயங்களையும், நீலநிறம் பொருந்திய அழகிய கண்டத்தையுங் கொண்டுநின்றார்.



3. *தன்னைநேரிலாப்பரம்பொருடனியுருக்கொண்ட*
*தென்னகாரணமென்றியேலைந்தொழிலியற்றி*
*முன்னையாருயிர்ப்பாசங்கண்முழுவதுமகற்றிப்*
*பின்னைவீடுபேறருளுவானினைந்தபேரருளே. 119*

3. தமக் கொப்பாருமிக்காரு மில்லாத நிர்க்குணராகிய பரம்பொருளான சிவபெருமான், ஒப்பில்லாத தமது அருள் எனப்படும் சமவேதசத்திகாரிய சகுணத் திருமேனி கொண்டருளியது என்ன காரணமென்று கேட்பீராயின், படைத்தல் முதலாகிய பஞ்சகிருத்தியங்களை செய்து. முன்பு அரிய ஆன் மாக்களது பாசத் தடைகள் எல்லாவற்றையும் நீக்கி, பின்பு முத்திப்பேற் றைக் கொடுக்கும் பொருட்டு திருவுள்ளத்திற் கொண்ட பெருங் கருணையேயாம்.

4. *அப்பரன்றனையுன்னியேயளவைதீர்கால*
*மெய்ப்பெருந்தவமியற்றினையதுகண்டுவெளிப்பட்*
*டொப்பிலாவரமுதவியேயாங்கதற்கொழிவுஞ்*
*செப்பிவைத்தனன்றேர்ந்திலைபோலுமத்திறனே. 120*

4. அப்படிப்பட்ட பரமபதியாகிய சிவபிரானை தியானித்து அளவில்லாத காலமாக மெய்ம்மையாகிய பெருந்தவத்தைச் செய்தீர், அப்பெருமான் அதனைக் கண்டு பிரசன்னராய் வந்தருளி, ஒப்பில்லாத வரங்களைத் தந்து, அப்பொழுது அவ்வரத்திற்கு முடிவையும் சொல்லி அருளினார், அவர் அவ்வாறு சொல்லியதை நீர் அறிந்தீர் இல்லை.

*5. பெறலருந்திருவுடையநீயறத்தினைப்பேணி*
*முறைபுரிந்திடாதாற்றலாலமரரைமுனிந்து*
*சிறையில்வைத்தனையதுகண்டுநின்வலிசிந்தி*
*யிறுதிசெய்திடவுன்னினன்யாவர்க்குமீசன். 121*

5. எவராலும் பெறுதற்கரிய செல்வத்தை உடைய நீர், நீதிநூலிலே விதிக்கப்பட்ட தருமத்தை விரும்பி நீதியைச் செய்யாமல் வலிமையினால் தேவர்களைக் கோபித்துச் சிறைச்சாலையில் (விலங்குபூட்டுவித்து) வைத்தீர், எவர்களுக்கு முதல்வராகிய சிவபெருமான் அங்ஙனம் தேவர்களைச் சிறை வைத்து வருந்துந் தன்மையைத் திருவுளத்துணர்ந்து, உமது ஆண்மையை அழித்து இறுதி செய்திட உம்மைச் சங்காரம் செய்தல் பொருட்டு திருவுளங் கொண்டருளினார்.

*6. வரமளித்தயாமழிப்பதுமுறையன்றுவரத்தாற்*
*பெருமைபெற்றுளசூரனையடுவதுபிறர்க்கு*
*மரிதெனப்பரனுன்னியேதன்னுருவாகு*
*மொருமகற்கொடுமுடித்துமென்றுன்னினெனுளத்தில். 122*

6. வரங்கொடுத்த நாம் சம்ஹாரம் செய்வது நீதியல்ல, வரத்தினால் (எவர்களினும்) மிகப் பெருமை பெற்றிருக்கின்ற சூரபன்மனைக் கொல்வது எவர்களுக்குங் கூடாதென்று சிவ பெருமான் சிந்தித்து, தமது வடிவாகிய ஒப்பற்ற மகனைக் கொண்டு அழிப்போம் என்று திருவுளத்தில் நினைந்தார்.



*7. செந்திறத்திருமேனியந்திருமுகமாறு*
*மன்னதற்கிருதொகையுடைத்தோள்களுமாக*
*முன்னவர்க்கு முன்னாகியபராபரமுதல்வன்*
*றன்னுதற்கணா லொருதனிக்குமரனைத்தந்தான். 123*

7. செந்நிறம் பொருந்திய திருமேனியும் பன்னிரண்டு திருப்புயங்களும் அமைந்துள்ள, ஒப்பில்லாத் ஒரு திருக்குமாரரை, முதல்வர்க்கெல்லாம் முதல்வராகிய சுத்தமாயாதீதரான சிவபெருமான் தமது நெற்றிக் கண்ணால் உண்டாக்கினார்.

*8. மானுடத்தரின்விலங்கினிற்புட்களிமற்று*
*மூனமுற்றுழல்யாக்கையிற்பிறந்துளாரொப்ப*
*நீநினைக்கலைபரஞ்சுடர்நெற்றியந்தலத்தே*
*தானுதித்தனன்மறைகளுங்கடந்ததோர்தலைவன். 124*

8. வேதங்களாலும் அறியப்படாத முதல்வராகிய ஆறுமுகப் பெருமான், பரஞ்சோதியாகிய சிவபெருமானது நெற்றிக் கண்ணின்றுந் திருவவதாரஞ் செய்தார்; அவரை மனிதர்களிலும் மிருங்களிலும் பட்சிகளிலும் இன்னும் தசைப்பற்றுள்ளதாய் உழலுகின்ற சரீரத்திலும் பிறந்தவர்களைப் போல் நீ இழிவாக எண்ணற்க. எனவே பரமபதியாகிய சிவபெருமானே அவர் என்பதும் அவருடைய சொரூப இலட்சணம் வேதங்களாலும் அறிப்படாது என்பதும் அவர் கொண்டருளிய வடிவம் சத்திகாரியமாகிய அருட்டிருமேனி என்பதும் குறிப்பித்தார் என உணர்க.

*9. சீலமில்லவர்க்குணரவொண்ணாதசிற்பரனைப்
பாலனென்றனையவனிடத்திற்பலபொருளு
மேலைநாள்வந்துதோன்றியசிறியதோர்வித்தி
னாலம்யாவையுமொடுங்கியேயவதரித்ததுபோல். 125*

9. உண்மைஞானமில்லாத பாவிகளாலே அறிப்படாத ஞானவடிவினரான கந்தசுவாமியாரை சிறு குழந்தை என்று மதிப்பில்லாமல் பேசினீர், சிறிய தொருவிதையில், விழுதுகளும் கிளைகளும் அப்புகளுமுள்ள பெரிய ஆலவிருட்சம் முழுவதும் அமைந்து தோன்றினாற் போல, அப்பெருமானிடத்தினின்றும் சித்து அசித்தாகிய பிரபஞ்சங்கள் எல்லாம் ஆதி காலத்தில் வந்து உற்பவித்தன.

*10. அருவுமாகுவனுருவமாகுவனருவு
முருவுமில்லதோர்தன்மையுமாகுவனூழின்
கருமமாகுவனிமித்தமுமாகுவன்கண்டாய்
பரமனாடலையாவரேபகர்ந்திடற்பாலார். 126*

10. சுருதிகளிலே பிரதிபாதிக்கப்படும் பரப்பிரமமாகிய சிவபெருமான், நிட்களமாகிய சிவம் சத்தி எனப்படும் அருவத்திருமேனிகளையும் எடுத்தருளுவார்; சகலமாகிய மகேச்சுரன் உருத்திரன் விஷ்ணு பிரமா எனப்படும் உருவத் திருமேனிகளையும் எடுத்தருளுவார், இன்னும் ஒவ்வோரேதுப் பற்றிச் சுவேச்சையினால் பற்பல திருமேனிகளைக் கொண்டருளுவார், அருவும் உருவும் இல்லது ஓர் தன்மையாம் நிட்கள சகலமாகிய சதாசிவத் திருமேனியையும் எடுத்தருளுவார், ஊழின் கருமம் ஆகுவானும்,முறையே சமஸ்தப் பிரபஞ்சங்களாயும் இருப்பார்,நிமித்தமும் ஆகுவானும் அப்பிரபஞ்ச கர்த்தாவாகவும் இருப்பார், ஆதலால் அப்பெருமானுடைய திருவிளையாடல் லீலையை ஆர்தான் சொல்லவல்லார் (ஒருவருமிலர்) !



**குறிப்பு** : சிவஞான சித்தியார், செய்யுள் 38

*"காரிய காரணங்கள் முதல் துணை நிமித்தம் கண்டாய்
பாரின் மண் தரிகை பண்ணுமவன்,முதல் துணை நிமித்தம்;
தேரின், மண் மாயை ஆக, திரிகைதன் சத்திஆக
ஆரியன் குலால னாய் நின்று ஆக்குவன் அகிலம் எல்லாம்."*

ஒரு செயற்பாட்டிற்கு வேண்டும் காரணங்கள் முதல், துணை,நிமித்தம் என மூவகைப்படும். எடுத்துக்காட்டாக இவ்வுலகின் கண் குடம் உருவாவதற்கு மண்ணும், அதனால் உருவாக்கப்படுதற்குரிய உருளும் குயவனும் முறையே முதற்காரணமும் துணைக் காரணமும், நிமித்த காரணமும், ஆம். ஆராயுமிடத்து இவ்வுலகு முதலியன உருப்பெறும் செயப்பாட்டிற்கும், மண் போன்று மாயை முதற்காரணமாகும், உருள் போன்று சக்தி துணைக் காரணமாம், குயவன் போன்று சிவபெருமான் நிமித்த காரணன் ஆவன் என்பதாம். ஆகவே, உலகத் தோற்றத்திற்கு சிவபெருமானே நிமித்த காரணன்.

*11. வேதக்காட்சிக்கு முபநிடத்துச்சியில்விரித்த
போதக்காட்சிக்குங்காணலன் புதியரிற்புதியன்
மூதக்கார்க்குமூதக்கவன் முடிவிற்குமுடிவா
யாதிக்காதியா யுயிர்க்குயிராய் நின்றவமலன். 127*

11. தமக்குப்பின் தோன்றிய யாக்கையை உடையார் எல்லாரும் மூப்பவும்தாம் நிலைபெற்ற விளமை உடையராதலின் எல்லார்க்கும் புதியவர், எல்லார் யாக்கைக்கும் முன்னே தமதிச்சையாற் கொள்ளப் பட்ட திருமேனியை உடையராதலின் எல்லார்க்குந்தான் பழையவர், முடிவிற்கு முடிவாய், உலகத்திற்குப்பின்னாய் ஆதிக்கு முன்னுமாய், சீவான்மாவிற் பரமான்மாவாய் உயிர்க்கு உயிராய் வியாபித்து நின்ற மலரகிதராகிய சுப்பிரமணியப் பெருமான்,வேதத்தின் கிரியாகாண்டங் களால் உணர்த்தப்பட்ட அறிவிற்கும், வேத சிரசுகளாகிய உபநிடதங்களிலே விரித்துக் கூறப்பட்ட ஞான அறிவிற்கும் அப்பாற்பட்டு நின்றவர்.

*12. ஞானந்தானுருவாகியநாயகனியல்பை
யானுநீயுமாயிசைத்துமென்றாலஃதெளிதோ
மோனந்தீர்கலாமுனிவருந்தேற்றிலர்முழுதுந்
தானுங்காண்கிலனின்னமுந்தன்பெருந்தலைமை. 128*

12. ஞானமே திருமேனியாகவுடைய பெருமானது சொரூபலசஷண மகிமையை நானும் நீருமாகப் பேசுவோமெனின், நித்தியநிரதிசயானந்த சின்மாத்திர சுயஞ்சோதியாகிய அச்சொரூபலசஷண மகிமை எளிதா; எளிதன்று, மௌன நிலை நீங்காத சிவத்தியானபரராகிய முனிவர்களும் தெளிந்தறியார், இன்னமும் தமது பெருந்தலைமையை முற்றும் தாமும் காண்கின்றலர்.



*13. தத்தமாற்றங்கணிறுவியசமயிகள்பலருங்
கத்துபுன்சொலைவினவினரவன்செயல்காணார்
சுத்தவாதுளமுதலியதந்திரத்தொகுதி
யுய்த்துணர்ந்திடுநீரரேயொருசிறிதுணர்வார். 129*

13. தங்கள் தங்கள் பேச்சையே தாபித்த பலசமயத்தாரும். பிதற்றுகின்ற புன்சமயநூல்களை (மெய்யென்று) கேட்டொழுகுகின்றவர்கள் அப்பகவா னுடைய சொரூபலசஷண முதலியவற்றை ஒருசிறிதுமறியார், பின்னர்யாவர் அறிவர் எனின் சமயாதீதமாகிய சுத்தாத்துவித சைவ சித்தாந்த நெறியினராய், நிட்களமாகிய வாதுள முதலிய சிவாகமநூற் றொகுதிகளை ஐயந்திரிபற ஆராய்ந்து அறியும் அறிஞர்களே ஒருபிரகாரம் அறிவார்கள்.

*14. கருவிமெய்ப்புலன்காட்டுவான்காண்பவன்காடசிப்
பொருளெனப்படுநான்மையு மைவகைப்பொறியு
மிருதிறத்தியல்வினைகளுங் காலமு மிடனு
மரபின்முற்றுறுபயனுமாய் நின்றனன்வள்ளல். 130*

14. காண்பவனுங் காட்சியும் காட்சிப் பொருளுங் காட்டுவானும் என்று சொல்லப்படும் சதுட்டயங்களும் ஐம்பொறிகளும், இருவினை களும், இறப்பு நிகழ்வு எதிரெனப்படுங் காலங்களும், தன்மை முன்னிலை படர்க்கையாகிய இடங்களும், முறையே முற்றுப்பெறுகின்ற பிரயோசனமுமாய் கந்தசுவாமியார் நின்றார்.

*15. ஞாலமுள்ளதோர்பரம்பொருணாமெனப்புகலு*
*மாலும்வேதனுமாயையாம்வரம்பினுட்பட்டார்*
*மூலமாகியதத்துவமுழுவதுங்கடந்து*
*மேலுயர்ந்திடுதனிமுதலவனன்றிவேறார். 131*

15. உலகத்தில் உண்மையாக அறியப்படுகின்ற பரப்பிரமம் நாமே என்று கூறும் விஷ்ணுவும் பிரமனும் அவருடைய மாயாவியாபகத்தினுள் உட்பட்டார்கள், பிரபஞ்ச உற்பத்திக்கு முதலாகவுள்ள தத்துவங்கள் எல்லாவற்றையும் கடந்து, மேலாக உயர்ந்து நிற்கின்ற ஒப்பற்ற பிரம மாகிய பொருள் அப்பெருமானேயன்றி வேறு யாவர் (ஒருவருமில்லை).

*16. தூயபார்முதலாகவேகுடிலை யின் றுணையு*
*மேயவண்டமுமுயிர்களும்வியன்பொருள்பலவு*
*மாயுநின்றனனல்லனுமாயினனவன்றன்*
*மாயையாவரேகடந்தனர்மறைகளுமயங்கும். 132*

16. பரிசுத்தமான பிருதிவி தத்துவ முதல் சுத்தமாயை வரையும் இருக் கின்ற பல அண்டங்களும் அவைகளில் உள்ள பலவகை உயிர்களும், மேலான பலவகைப் பொருள்களுமாக நின்றார், அவைகள் அல்லனு மாயினார், அப்படிப்பட்ட கந்சுவாமி பெருமானுடைய மாயா வல்லபத்தை ஆர்தான் கடந்தார்கள், வேதங்களும் உண்மையை அறியாது மயங்காநிற்கும்.



*17. இன்னதன்மைசேர்முதல்வனைச்சிறுவனென்றிகழ்ந்து*
*பன்னுகின்றனையவுணர்தங்கிளையெலாம்படுத்து*
*நின்னையுந்தடிந்திடுவனோரிமைப்பினிரப்புந்*
*தன்னருட்டிறங்காட்டுவான்வந்தனன்சமர்மேல் . 133*

17. இத்தன்மையாகிய மகிமை பொருந்திய பகவானான கந்தசுவாமி யாரை சிறு குழந்தை என்று அவமதித்துப் பேசுகின்றீர், அசுர கூட்டங்கள் எல்லாவற்றையும் அழித்து,ஒரு கணப் பொழுதில் உம்மையும் சங்கரிப்பர், பூரணமாகிய தமது அருள் தன்மையைக் காட்டும் பொருட்டு போரைக் குறித்து வந்திருக்கின்றார்.

*18. அற்றமில்வகையாயிரத்தெட்டெனுமண்டம்*
*பெற்றனம்மெனவியந்தனை தத்துவபேத*
*முற்றுணர்ந்திலை தரணியோவளப்பிலவுளகாண்*
*மற்றையண்டங்கள்கேட்டியேன்மருளுதிமன்னோ. 134*

18. அழிவில்லாத வகையாய் ஆயிரத்து எட்டு எனும் தொகையினை யுடைய அண்டங்களைப் பெற்றேம் என்று பாராட்டுகின்றீர், தத்துவங் களின் பிரிவுகளை ஆராய்ந்து அறிந்தீரில்லை, பிருதுவியிலேயோ (நீர் பெற்ற 1008 அண்டங்களே அன்றி) அளவில்லாத அண்டங்கள் இருக்கின்றன என்று அறிந்து கொள்ளும்;அப்பு தத்துவ முதலிய முப்பத்தைந்து தத்துவங்களினு முள்ள அண்டங்களை கேட்பீரானால் மயக்கம் அடைவீர்.

*19. குடிலையீறதாவாரியேமுதலதாக்குழுமி
யுடையவண்டங்களலகிலவென்ப ரொன்றொன்றி
னடைதலுற்றிடுபுவனத்தின்பெருமையாரறிந்தார்
முடிவுறாததோர்பொருளினைமுடிவுகூறவற்றோ. 135*

19. அப்பு தத்துவம் முதல் சுத்தமாயை வரையும் கூடியிருக்கின்ற அண்டங்கள் அளவில்லாதன என்று கூறுவர், ஒவ்வொரு தத்துவங்களிலும் இருக்கின்ற புவனங்களின் மிகுதிப்பாட்டை யாவர் அறிந்தார், ஆதலால் முடிவில்லாத ஒரு பொருளுக்கு முடிவு சொல்லலாமோ?
சொல்லப்படாது.

*20. அன்னவாகியவண்டங்களனந்தகோடியையுந்
தன்னதாணையாலோரிமைப்பொழுதினிற்றரவும்
பின்னர்மாற்றவும்வல்லதோர்ஆதியம்பிரான்கா
ணுன்னெடேபொருமாடலாற்செந்திவந்துற்றான். 136*

20. அப்படிப்பட்டனவாகிய அனந்த கோடி அண்டங்களையும், தமது ஆஞ்ஞையினால் ஒரிமைப்பொழுதில் உண்டாக்கவும், பின்பு அழிக்கவும், வல்லவராகிய ஒப்பற்ற முழுமுதற் கடவுளே, உம்முடன் போர் செய்ய வேண்டும் என்னும் லீலா அபிப்பிராயத்தினால் திருச்செந்தூர் பதியில் வந்து எழுந்தளியிருக்கின்றார்.



*21. வச்சிரத்தனியாக்கைபெற்றனமெனமதித்தா
யிச்சிரத்தையைவிடுமதி யிருவினைக்கீடா
வச்செடுத்திடுமுயிர்கண்மாய்ந்திடுமெனவறிஞர்
நிச்சயித்தனர் முடிவுறதிருத்திகொனீயே 137*

21. ஒப்பில்லாத வச்சிரகாயத்தைப் பெற்றுக் கொண்டேமென்று மதித்திருக்கின்றீர், இந்த நம்பிக்கையை விட்டுவிடும், நல்வினை தீவினை என்று கூறப்படும் இருவினை கட்கீடாக அவற்றின் சுகதுக்கங்களை அனுபவிக்கும் பொருட்டு சரீரம் எடுத்துப் பிறக்கின்ற ஆன்மாக்கள் அவ்வினைப் பயன்களை அனுபவித்து தொலைந்த ஞான்றே இறந்து விடுமென்று அறிவிற் சிறந்த பெரியோர்கள் நிச்சயித்திருக்கின்றார்கள், ஆதலால் நீர் மாத்திரம் இறவாமலிருப்பீரோ? இறப்பீர் என்பது துணிவு.

*22. பெருமைபெற்றிடுவானத்தினிலத்திடைப்பிறந்தோ
ரிருமைபெற்றிடுகாயமுமிறந்திடுந்திண்ணம்
பருமிதத்துநின்வச்சிரயாக்கையும்பாரி
னுரிமைபெற்றுளதாதலானழிவின்றியுறுமோ. 138*

22. பெருமை பொருந்திய மேலுகத்தினும் பூமியினும் பிறந்தவர்களுடைய இரு பகுதியாகிய சரீரங்களும் நிச்சயமாக அழியும், இறுமாப்புள்ள உமது வச்சிரயாக்கையும், பிருதுவி சம்பந்தம் பெற்றிருக்கின்றதால் அழியாதிருக்குமா? அழிந்துவிடும்.

*23. அழிவின்மெய்வரம்பெற்றனமென்றனை யதற்கு*
*மொழிதரும்பொருள்கேண்மதி முச்சகந்தன்னுட்*
*கெழியமன்னுயிர்போற் சிலவைகலிற்கெடாது*
*கழிபெரும்பகலிருந்திடும்பான்மையேகண்டாய். 139*

23. அரசனே, அழிவில்லாத மெய்ம்மையாகிய வரம் பெற்றோமென்று கூறினீர், அழிவற்ற வரம் என்பதற்குச் சொல்லப்படும் பொருளைக் கேட்பீராக, மூவுலகங்களிலும் இருக்கின்ற நிலை பெற்றறுயிர்களைப் போல சில நாட்களில் அழியாமல்,மிக்க அனேக காலத்திற்கு இருக்கின்ற தன்மையே என்று உணர்வீர்.

*24. அச்சுதன்னயனமரராகியபெய ரவர்க்கு*
*நிச்சயம்படுமுகமனேயானபோ னினது*
*வச்சிரத்தனியாக்கையு மழிவிலாவரமு*
*முச்சகந்தொழப்பல்லுகமிருத்தலாய்முடியும்.*

24. அழிவற்றவன், பிறப்பில்லாதவன், இறப்பில்லாதவர் எனப் பொருள்படும் அச்சுதன் அயன் அமரர் என்று கூறப்படுவனவாகிய பெயர்கள், அவ்வப் பெயரையுடைய விஷ்ணுவுக்கும் பிரமனுக்கும் தேவர்க்கும் நிச்சயமான உபசாரமேயானாற் போல உம்முடைய ஒப்பற்ற வச்சிரகாயமும், அழிவில்லாத வரங்களும், சுவர்க்கமத்திய பாதலம் எனப்படுகின்ற மூன்று உலகங்களும் வணங்கும்படி அனேக யுகங்களுக்குச் சீவித்திருத்தலாகவே முடியும்.



*141. வான்செய்தேவரைநீயலைக்கின்றதைமதியா*
*வூன்செய்கின்றபல்லுயிருக்குமுயிரதாமொருவன்*
*றான்செய்கின்றதொல்வரத்தினைத்தான்றவிர்த்திடுமே*
*லேன்செய்தாயெனவினவியேநிறுவுவாரெவரே.*

141. ஆகாய பதவியில் வாழ்கின்ற தேவர்களை நீர் சிறையில் வைத்து வருத்துகின்றதை நினைத்து, உடம்பைத் தமக்கு நிலைக்களமாகக் கொண்ட பலவகை உயிர்களுக்கும் பரமான்மாவாக வியாபித்திருக்கின்ற சிவபெருமான், தாந்தந்தருளிய பழமையாகிய வரத்தைத் தாமே மாற்றுவாராயின் அப்பெருமானை ஏன் அப்படிச் செய்தீரென்று கேட்டுப் பழையபடி இருக்கச் செய்பவர் யாவர்?

*142. கெடுதலில்லதோர்வளனொடுநீயுநின்கிளையும்,*
*படுதலின் றியேவாழ்தியென்றின்னனபகர்ந்தே,*
*விடுதல்கொண்டிடுசிறையிடைத்தேவரையின்னே*
*விடுதல்செய்குதியென்றனனறிஞரின்மிக்கான்*

142. அழிவில்லாத செல்வத்துடன் நீரும் உமது சுற்றத்தாரும் அழிவின்றி வாழ்ந்திருப்பீர் என்று இத்தன்மையாகிய நன்மதிகளைப் போதித்தேன், நீர்வைத்த சிறையினின்றும் தேவர்களை இப்பொழுதே நீக்கி விடுமென்று சாஸ்திர வாரா்ய்ச்சியுள்ள அறிவுடையோரில் சிறந்தவனாகிய சிங்கமுகன் கூறினன்.

**திருச்சிற்றம்பலம்.**

உ

## திருப்புகழ்

217 கும்ப கோணமொ டாரூர் சிதம்பரம்
உம்பர் வாழ்வுறு சீகாழி நின்றிடு
கொன்றை வேணியர் மாயூர மம்பெறு சிவகாசி.

கொந்து லாவிய ராமே சுரந்தனி
வந்து பூஜைசெய் நால்வேத தந்திரர்
கும்பு கூடிய வேளூர் பரங்கிரி தனில்வாழ்வே;

செம்பு கேசுர மாடானை யின்புறு
செந்தி லேடகம் வாழ்சோலை யங்கிரி
தென்றன் மாகிரி நாடாள வந்தவ செகநாதஞ்

செஞ்சொ லேரக மாவா வினன்குடி
குன்று தோறுடன் மூதூர் விரிஞ்சைநல்
செம்பொன் மேனிய சோணாடு வஞ்சியில் வருதேவே;

கம்பைமாவடி மீதேய சுந்தர
கம்பு லிவிய காவேரி சங்கமு
கஞ்சி ராமலை வாழ்தேவ தந்திர வயலூரா-

கந்த மேவிய போரூர் நடம்புரி
தென்சி வாயமு மேயா யகம்படு
கண்டி யூர்வரு சாமீக டம்பணி மணிமார்பா;

எம்பி ரானொடு வாதாடு மங்கைய
ரும்பர் வாணிபொ னீள்மால் சவுந்தரி
எந்த நாள்தொறு மேர்பாக நின்றுறு துதியோதும்;

இந்தி ராணிதன் மாதோடு நன்குற
மங்கை மானையு மாலாய்ம ணந்துல
கெங்கு மேவிய தேவால யந்தொறு பெருமாளே.

— அருணகிரிநாதர்

**திருச்சிற்றம்பலம்**



## வாழ்த்து

ஆவாழி, மறைவாழி, அறங்கள் வாழி,
அந்தணர்கள் வாழி, இறைனாமம் வாழி,
பூவாழி, புண்ணிய வெண்ணீறு வாழி,
பூமகளு நாமகளும் பொலிந்து வாழி,
சேய்வாழி சிவன்வாழி, உமையாள் வாழி,
தெய்வவள்ளி யானைமயில் சேவல் வாழி,
தேவாம் கோலாலம் பூரில் வாழும்
செங்கைவடி வேலவரும் வாழி வாழி!

**திருச்சிற்றம்பலம்.**